உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தகுரவே நம:



# சர்வான்மாக்களும் முத்தியைச் சார்ந்தேவிடும்.



இஃது

தூத்துக்குடி
சைவசித்தாந்தசபைக் காரியதரிசி
தெ. ச. சு. சுப்பிரமணியபிள்ளையால்,



ஸ்ரீமாந். போ. முத்தையபிள்ளையவர்க ளியற்றிய
"தசகாரிய விளக்கத்தின்"
சிலவிஷயங்களின் மறுப்பாக இயற்றப்பட்டது.



N. சிவகுருநாதபிள்ளையால்,
தூத்துக்குடி:
சைவப்பிரகாச அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1912

## முகவுரை.

"சர்வான்மாக்களும் முத்தியைச் சார்ந்தேவிடும்"என்னும் இக்கொள்கையானது சைவசித்தாந்தத்துக்கு உடன்பாடாயதொன்றென்பது எனது அபிப்பிராயமாகவும், உடன்பாடாகாததொன்றென்பது எமது நண்பர் ஸ்ரீமாந். பொ. மு. முத்தையபிள்ளையவர்களது அபிப்பிராயமாகவும் இருந்துவருவதொன்றாயினும் அவர்கள் இக்கொள்கை சம்பந்தமான சில ஆசங்கைகளைத் தம்மால் சிறிதுகாலத்தின் முன்னர் வெளியிடப்பட்டுள்ள "தசகாரிய விளக்க"மென்னும் நூலின்கண் வருவித்து அவற்றிற்குச் சில சமாதானங்கூறி அதன் வாயிலாய்த் தன் பக்ஷத்தை நாட்டிவிட்டதாக முடித்திருக்கின்றார்கள். அதனை அந்நூல் 75ம் பக்கமுதல் 83ம் பக்கம்வரை பார்க்கக்காணலாம்.

இனி, ஆண்டுக்கூறிய சமாதானம் அவர்கள் பக்ஷத்தை நாட்டுதற்குப்போந்தவலி ஒரு சிறிதும் உடையதன்றென்பது எனது துணிபாகலின், ஈண்டு அதின் சாரத்தையும் அதன்முன்னர் எமதுநேரில் அவர்கள் நிகழ்த்திய வாதத்தின் சாரத்தையும் திரட்டி அவற்றைப் "பூர்வபக்ஷம்" என்பதன்கீழ் விளக்கியும், அதற்கு மறுப்பாகக்கூறும் எனது அபிப்பிராயத்தைச் "சித்தாந்தம்" என்பதின்கீழ் விளக்கியும் யான் எனது பக்ஷத்தை நாட்டுவான்றுணிந்துளேன். அங்ஙனமாயினும், அவற்றுள் எக்கொள்கை சைவசித்தாந்தவல்லார் சமூகத்தால் சித்தாந்தமெனத் துணியப்படுமோ அக்கொள்கையே எமது சித்தாந்தமாம்.

இனி, இத்தசகாரியவிளக்கம் வெளியிடப்பட்டுச் சுமார் இரண்டு வருடங்களாகியும் இதுகாறும் இம்மறுப்பைவெளிப்படுத்தாது தாழ்த்தமைக்குக் காரணம் ஒரே சபையின்கணுள்ள இருவர்தாமே ஒருவருக்கொருவர் வாதி பிரதிவாதியாக வாதித்து முடிவுகாண்பதினும் பிறரால் இவ்வாதம் நிகழ்ந்து முடிவுக்குவருமாயின் நன்றெனக்கருதியதேயாம். இப்போது வெளியிடுவதற்குக்காரணம் அங்ஙனம் பிறரால் இதுகாறும் ஓர் நூல்வழியாக இவ்விவாதம் வெளியிடப்படாமையேயாம்.

---

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

திருஞானசம்பந்தகுரவே நம:

# சர்வான்மாக்களும் முத்தியைச் சார்ந்தேவிடும்.

## காப்பு.

சீரா ருயிரனைத்துஞ் சேரா ணவநீங்கி
நேராரு முத்தியுற்று நின்றிடுவான்—பாராருட்
டேராருந் தேர்ந்துய்யத் தீர்த்ததல மூர்த்தியாங்
காரானை மாமுகனே கா.

## பூர்வபக்ஷம்.

"நல்ல சிவமுத்தியின்கட் பெத்தான்மாவை நணுகி நிற்குமாதலால் நாசமுமின்றாமே" எனவரும் சித்தியார் வாக்கியமானது பரமுத்தியடைவதற்குப் பக்குவம் வாய்ந்த முத்தான்மாக்களைவிட்டு அறவே நீங்கும் தன்மைத்தான ஆணவமலம் அங்ஙனம்நீங்கியவழிப் பெத்தான்மாவைநணுகிநிற்கும் என்றுணர்த்துவதால், நித்தப்பொருளான அவ்வாணவமலம் நித்தமுந் தங்கி நிற்றற்பொருட்டு அதற்காதாரமாகப் பெத்தான்மாக்களும் நித்தியமும் இருந்தே தீரவேண்டுமாகலின், இன்னும் எத்தனை கோடாகோடி கற்பகாலம் பஞ்சகிர்த்யம் நிகழினும் எல்லா ஆன்மாக்களும் ஒருசேர முத்தியடைதல் இயலாது.

### சித்தாந்தம்.

மேலெடுத்துக் காட்டு வாக்கியம் ஆணவமலத்துக்குத் தாரகம் பெத்தான்மாவே என சித்தாந்தஞ் செய்தற்பொருட்டு எழுந்ததன்றாக லின், அதுகொண்டு ஆணவமலத்துக்குத் தாரகம் பெத்தான்மாவை யன்றிப் பிறிது யாதொன்றும் இன்றெனவும், அதனால் பெத்தான்மா நித்தமும் இருந்தே தீரவேண்டுமெனவும் கூறுவது சிறிதும் அடாது. அஃதடாததாகவே, அவ்வேதுவின் துணைவலிகொண்டு எல்லா ஆன் மாக்களும் ஒருசேர முத்தியடைதல் எலாதெனச் சாதித்ததும் அடா ததேயாகுமாகலின், எக்காலத்திலாயினும் எல்லா ஆன்மாக்களும் பர முத்தியின்கண் எய்தியேவிடுமெனக் கொள்க

அற்றேல், மேலெடுத்துக்காட்டு வாக்கியந்தான் மற்றெதன் பொருட்டு எழுந்ததெனின்;—அஃது, ஆன்மாக்கள் முத்தியடைந்த வழியும் அணவமலம் நீங்கப்பெறாமலும் சிவானந்தானுபவ இன்பம் எய் தப்பெறாமலும் பாடாணம்போல் அதாவது ஓர் கல்லைப்போல் இருக்கு மென்னுங் கொள்கையினை மேற்கொண்ட பாடாணவாத சைவரை மறுத்தற்பொருட்டே. எழுந்ததென்க.

அஃது எதனாற் பெறப்படுகின்றதெனின், அப்பாடாண வாத சைவர் அதற்கு முந்திய செய்யுளில் "ஆணவந்தானநாதி யந்தமடையா தாகு மடையினந்தவான்மாவழியும்" என அதாவது ஆன்மாவை அநா தியே குணம்போலப்பற்றிநிற்கும் ஆணவமலம் நித்சப்பொருளானதால் அஃது அவ்வான்மாவைவிட்டு இடையே நீங்கிக் கேடுறாது; அன்றிக் கெடுமென்னில், அந்த ஆன்மாவும் கெடும் என வாதியாநிற்ப, அவ் வாதக்கை அநாதியே செம்பைப்பற்றிய களிம்பு இரத ளிகையின் பரிசவேதியால் நீங்கப்பெறவும் செம்பு கேடுறாது நிற்கவுங் கண்டாம்; அதுபோல் இறைவன் திருவருட் பரிசவேதிக்கிலக்காகும் ஆன்மாக்க ளும் ஆணவாதிமலம் நீங்கப்பெறுதலும் கேடுறாது சிவானந்தானு

பவியாயிருத்தலுங்கூடுமென ஆன்ம நித்தத்தன்மையை நாட்டி அதன் வாயிலாய் அவர் வாதத்தை மறுத்து அதன்மேல் அம்முத்தான்மாவை விட்டுநீங்கியவழியும் ஆணவமலம் கேடுறாதுநிற்றலை பெத்தான்மாவை நணுகி நிற்கக்காணுதலாகிய ஏதுவில் வைத்து நாட்டியதால் பெறப்படுகின்றதென்க. அதனை "ஆண்டு விண்டொழியினும் எனைப்பெத்தர்களிடத்துக் காணப்படுதலால் அவை (ஆணவாதிமலத்திரையங்கள்) நித்தப்பொருளாதற் கிழுக்கில்லை' எனவரும் அவ்வாக்கிய உரைகொண்டு தெற்றெனத் தெளிந்திடுக.

அற்றாயின், அனாதிதொட்டு ஆன்மாவையே தாரகமாய் பற்றி நின்ற ஆணவமலமானது சர்வான்மாக்களும் முத்தியடைந்தவழி அவற்றை விட்டு பற்றறக்கழிதல் ஒருதலையாகலின், அக்காலத்து அஃது மற்றெதனைத் தாரகமாகக்கொண்டு எவ்வாறிருக்குமெனின், எவற்றிற்குந் தாரகமாதல்பற்றி "தாரகப்பிரமம்" என வழங்கப்பெறுஞ் சிவபரம் பொருளையே தாரகமாகக்கொண்டு அதன் வியாபகத்தில் வியாப்பியமாய் ஒடுங்கியடங்கி இருக்குமென்க.

அதனை * "வியாபகமலமானமாவுக்கென்றிடின் வீடுசேரா
வியாப்பியமலமான்மாவுக்கென்றிடின் விரவாபந்தம்
வியாபகவியாப்பியங்களின்றியேசமத்தின்மேவும்
வியாத்தியேநீக்கநீங்கிவிமலனுளடங்குமாதோ"

எனவரும் வாக்கியத்தாற் றெளிந்திடுக. இச்செய்யுளின்கண் "சமத்தின்மேவும் வியாத்தியே நீக்க நீங்கி விமலனுளடங்கும்" எனக் கூறியது ஆணவமலத்தையேயாம் என்பதனை † "வியாபகவியாத்தி ஆன்மா வினில்விளங்கமலன்சத்தி, வியாப்பிய வியாத்தியான்மசத்தி

---

* தணிகைப்புராணம் அகத்தியருபதேசப்படலம் செ. ௫௯௫.
† ஷை ஷை செ. ௧௮௫.

யின்விரவுமாயை, வியாபக வியாப்பியங்களின்றியே சமத்தின்மேவும், வியாத்தியே யுயிருமொன்றாய் விரவிருண்மலமுமாதோ'' எனவரும் வாக்கியத்தாற் றெளிந்திடுக.

## பூர்வபக்ஷம்.

ஆன்மாக்கள் அளவிறந்தனவாகலின் இன்னும் எத்தனை கோடாகோடி கற்பகாலம் செல்லினும் எல்லா ஆன்மாக்களும் ஒருசேர முத்தியடைதல் இயலாது.

## சித்தாந்தம்.

அளவிறந்தன என்பதின் பொருள் ஆயிரம், பதினாயிரம் ஆயிரங்கோடி, பதினாயிரங்கோடி என்பதாதியாகக் கூறும் கணித எண்களால் வரையறுத்துக்கூற இயலாத ஓர்பேரெண்ணினைக்கொண்டதென்பதேயன்றிப் பிறிதில்லையாம். அற்றாக, சூரியவெப்பத்தால் அணு அணுவாகக் கிரகிக்கப்படும் பெரிய சமுத்திரஜலமும் மேல்வரத்தில்வழி காலாந்தரத்தில் ஓர் அணுப்பிரமாணமும் தங்காது வறண்டு போதல் ஒருதலையாதல்போல மேல்வரத்தில்லாத அதாவது புதிது புதிதாகச் சிருஷ்டிக்கப்படுதலின்றி அநாதியில் உள்ளதெவ்வளவோ அவ்வளவே எக்காலத்துமுள்ளதாக நியதிப்பட்டுள்ள ஆன்மகோடிகள் யாவுமே அவற்றைப் பந்தத்தினின்றும் விடுவித்து முத்தியிற் சேர்க்க வேண்டுமென்னும் காருண்யமே காரணமாகப் பதிசெய்யும் பஞ்சகிர்த்திய வழித்தாய் எக்காலத்தாயினும் ஈடிலாப்பேரின்பமுத்தியின்கண் எய்தியேவிடும் எனக்கொள்க.

இனி இங்ஙனம்அன்றி பெத்தான்மகோடிகளுக்கு இருவினைகளை யூட்டுவித்தொழித்தற்பொருட்டும், அதனாற்பருவம் எய்தியவழி மேலைக்கு வித்தாகாதவாறு தீக்கையால் அவற்றைமுதிர்வித்து பின்பற்றறக் கழித்தற்பொருட்டும், அவை கழியுமுகத்தால் எல்லா அனர்த்தங்

கட்கும்மூலமாகிய ஆணவமலத்தை போக்குதற்பொருட்டும் தனுகரண புவனபோகங்களைப் பொருத்திய பதி அவ்வழித்தாய் எக்காலத்திலாயினும்எல்லா ஆன்மாக்களையும் ஆணவபந்தத்தினின்றும் விடுவித்து முத்தியிற்சேர்த்தலை முற்றுப்பெறச்செய்யாது அவ்வான்மாக்கள் அளவிறந்தன என்பதுபற்றியாதல், பஞ்சகிர்த்தியம் அளவிறந்தகாலம்செய்தமை பற்றியாதல் இடையே சலித்து அநேக ஆன்மகோடிகளை முத்தியிற் சேராது ஆணவபந்தமாகிய இருட்கோட்டையில் அடைபட்டவாறே நித்தமும் துன்புறுமாறு விட்டுவிட்டு பதிசிறுபோதும் வாளாவிருந்து விடாது. அன்றி வாளாவிருந்து விடுமாயின் அப்பதிக்கு அசக்தராதல் என்னுங் குற்றம் வரத்திரியும். அன்றெனி லவ்வான்மாக்கள் மட்டில் கருணையில்லாரென்னுங் குற்றம் வரத்திரியும். அம்மட்டோ! அவ்வான்மாக்களிடத்து மிகத்துவேஷமுடையரெனினும் இழுக்காகாவாம்.

இனி எவ்வாற்றானும் ஆணவபந்தத்தை போக்குதற்பொருட்டாகவே ஆன்மாக்கட்கு பதி தனுகரணாதிகளை கொடுத்ததென்பதனை

* எல்லாமாய்த் தத்துவங்களியைந்ததென னுவுக்கென்னிற்
றெல்லாய கன்மமெல்லாந்துய்ப்பித்துத்துடைத்தற்கும்பின்
னில்லாமைமுற்றுவித்துநீக்கவுங்கூடிநின்ற
பொல்லாதஆணவத்தைப்போக்கவும் புகுந்ததன்றே.

எனவரும் வாக்கியத்தாற்றெளிந்திடுக.

## பூர்வபக்ஷம்.

ஆன்மாக்கள் அளவிறந்தன என்பதற்கு எண்ணலளவையால் அளக்கமுடியாததென்பது பொருளன்று; அதற்குப்போந்த பொருள் எடுக்கெடுக்கக் குறையாதிருப்பதென்பதே.

---

* சித்தியார் சூ. உ, செய்யுள் எக.

## சித்தாந்தம்

ஆன்மா எடுக்க எடுக்கக் குறையாத பொருளாயின் ஆலவாய்ப் பரமன் அடியார்கு நல்லார்க்கு அருளிய உலவாக்கோட்டைபோல்வ தொன்றாமெனப்பட்டு

''பஞ்சாதிவேதப்பொருள்சொன்னபரமன்வாக்கொன்
றஞ்சாதிவேளாண்டலைவாவுன் ஃகத்திலின்றோர்
செஞ்சாலியாயசெழுவாலரிக்கோட்டையுய்த்தே
மெஞ்சாதெடுக்குந்தொறுமெடுக்குந்தொறுமென்றுமாதோ''

என்றபடி ஆயிரம் ஆன்மாவையெடுத்து முத்தியிற் சேர்த்தவுடன் முன்னிருப்புத்திட்டங் குறையாதிருத்தற்பொருட்டு ஆயிரம் ஆன்மா புதிதாய் உண்டாய்விடும் எனவும், அங்ஙனமே கோடி, பத்துக்கோடி யென்பதாதியாக எத்தனை பல்லாயிரகோடி ஆன்மாக்களையெடுத்து முத்தியிற் சேர்த்தாலும் அத்தனை பல்லாயிரகோடி ஆன்மாக்களும் புதிது புதிதாக உடனுடன் உண்டாய்விடுமெனவும் கொள்ளவேண்டிவரும். அங்ஙனந்தான் கொள்வோமே எனில், அஃது சமயஅரசாய் விளங்கும் நமது சைவசித்தாந்தத்தை அவ்வுன்னத நிலைமையினின்றுந் தாழ்த்திக்கீழ்ப்படியிற்கொண்டுபோய் நிறுத்துவதற்கு இன்றியமையாச் சாதகமாயிருத்தலின் இவ்விழிந்த கொள்கையை உயர்ந்த சைவசித்தாந்தத்துக்குத் தேடித்தந்த நண்பர்செயல் அசைவரால் என்றும் மறக்கற்பாலதன்றாயினும், சைவரால் என்றும் வெறுக்கற்பாலதேயாம். அம்மட்டோ! சைவசித்தாந்தத்துக்கு முற்றுமுரணான இவ் அவசித்தாந்தக் கொள்கையை அதனோடிணைத்து ஒப்புயர்வற்ற அதன் பெருமைக்கு சிறுமைதேடிவைக்கப்பார்ப்பது பெரியதோர் பாவச்செய்கையுமாமென விடுக்க.

இனி, இக்கொள்கையால் சைவசித்தாந்தத்தின் பெருமைக்குச் சிறுமை எவ்வாறுண்டாமெனின் ?

(1) பெத்தான்மாக்களையெல்லாம் முத்தான்மாவாகச்செய்தற்பொருட்டு பஞ்சகிருத்தியம் தொடங்கிய பதி அப்பஞ்சகிருத்தியத்தை இன்னும் எத்தனை கோடாகோடி கற்பகாலம்செய்யினும், அதன்வழித்தாய் எத்தனை பல்லாயிரகோடி ஆன்மாக்களை முத்தான்மாவாக்கினும் பெத்தான்மாக்களின்தொகையில் ஒன்றுகூட குறைவுபடாது பிரகமசிருஷ்டிக்கு முன்னிருந்தபடியே இருக்கச்செய்து அப்பஞ்ச கிருத்தியத்தை பயனில் கிருத்தியமாக்கலானும்:

(2) ஆன்மாக்களனைத்தும் அநாதிநித்தியம் என்னும் சித்தாந்தத்தோடு மாறுற அநித்தியமாகவும், அவ்வான்மாக்கள் உண்டாதலும் இருத்தலும் கூடுமெனவும், "தோற்றப்பட்டதெல்லாம் அழியப்படும்" என்பதனோடு மாறுறத் "தோற்றப்பட்டது அழியப்படாதெனவும்" கொள்ளுமாறுசெய்து நம் சைவசித்தாந்தத்தைத் தத்துவவிருத்தமான மதங்களிலொன்றாக வாக்கலானும்;

(3) காரணமின்றிக்காரியமில்லை யென்னும் சற்காரிய வாதத்தோடு மாறுறக்காரணமின்றியும் காரியம் உண்டாமென. அசாவது. முத்தியிற்சேரும் காரணத்தாற் குறைவுபடும்பெத்தான்மாக்களின் கூட்டக் குறைவை நிறைப்பதற்குக்காரணமில்லாமலே பெத்தான்மாவாகிய காரியம் உண்டாமென அசற்காரியவாதம் அல்லது சூனியவாதம் கோடற் செய்து நமது சைவத்தை சூன்யவாதமதமாக்கலானும் உண்டாமென்க.

இவைபோன்ற ஆசங்கைகள் இன்னும் பலவுளவாயினும் அவற்றையெல்லாம் விரிவஞ்சி விடுத்தாம். இவற்றிற்கெல்லாம் நண்பர் தக்க சமாதானம் கூறி ஆன்மா எண்ணிறந்தன என்பதற்கு "எடுக்கஎடுக்கக் குறையாததென்பதே பொருள்" என்பதைக் காத்துக்கொள்ளும்வரை, அவ்வாக்கியத்திற்கு மேலே யாம் கூறியபொருளையே பொருளாகக் கொண்டு எக்காலத்தாயினும் எல்லா ஆன்மாக்களும் முத்திப்பேரின்பக் கடலில் மூழ்கியே தீருமெனத் துணிந்திடுக.

## பூர்வபக்ஷம்.

பெத்தான்மாக்கள் அறவே இல்லாதொழியின் சுத்தான்மாவோடு அநன்னியமான சொரூப சிவமேயன்றித் தடத்த சிவமென்பதில்லையாய்முடியும். அம்மட்டோ! பாசமும் இல்லையாய் முடியும். முடியவே இவ்விரண்டினையும் உணரும் பசுவும் இல்லையாய் நிரீச்சுரவாதமல்லது சூனியவாதமாய்முடியும்.

## சித்தாந்தம்.

இங்ஙனம் செய்துள்ளமுடிவுயாவும் தடஸ்தஇலக்கண, சொரூப இலக்கண வேறுபாடினைத்தென்பதனை உள்ளவாறு உய்த்துணரப் பெறாக்குறைவிறைச் செய்துகொண்டதோர் அவசித்தாந்த முடிவேயாம் எங்ஙனமெனிற்? காட்டுதும்:—

ஒரு பொருட்கு யாதானும் ஓர் தன்மை இடையே வரப்பெறுமாயினும் இடையே நீங்கப்பெறுமாயினும் அது அப்பொருட்குத்தடத்த இலக்கணமாம். இங்ஙனமிடையே வருதலும் இடையே போதலுமின்றி ஒரு பொருட்கு என்றும் உள்ளதாய் நிலவுவதோர் தன்மை எதுவோ அதுவே அப்பொருட்குச் சொரூபஇலக்கணமாம். இஃது இங்ஙனமாக தடஸ்த சிவம் என்பது.

“உருவருள் குணங்களோடு முணர்வருளுருவிற்றோன் றுங்
கருமமுமருளரன்றன் கரசரணாதிசாங்கந்
தருமருளுபாங்கமெல்லாந் தானருள்தனக்கொன் றின்றி
யருளுருவுயிருக்கென்றே யாக்கினனசிந்தனன்றே.

எனவும் “செப்பிய மூன்றும்” நந்தஞ்சருமேனி கழிக்கவந்த கருணையின் வடிவுகாணே” எனவும் சிவஞானசித்தியார் அருணூலின் வரும் வாக்கியங்களின்படி அநாதியே பந்தப்பட்ட ஆன்மகோடிகளனைத்தையும் அப்பந்தத்தினின்றும் விடுவித்து முத்திப்பேரின்பக்கடலில் மூழ்குவித்தற்பொருட்டு பிரதம சிருஷ்டியாரம்பத்தில் சொரூப

சிவம்கொண்ட அருட்டிருமேனியேயாம் அற்றாக, நோயாளருக்குள்ள நோய் தீரும்வரை வேண்டப்படுவதான ஓர் வைத்தியன் நோயென்பதை வேறெக்காலத்தும் வராவண்ணம் மூலதோஷஹானியாக முற்றும் சங்கரித் தொழித்தவழி வேண்டப் படாதவாறுபோல ஆன்மாக்களைப் பற்றியிருந்த ஆணவ நோயை பஞ்சகிருத்திய வாயிலாக ஊட்டப்படும் மாயாபந்த கன்மபந்த ஔடதத்தால்பற்றறக்களைந்து சர்வான்மாக்களையும் முத்திப்பேரின்பசாகரத்தில் மூழ்குவித்தபின்னர் அந்நோய்நீக்கும் வைத்தியன்போன்று வந்த தடத்தசிவக்கோலமும் வேண்டப்படுவதின்றாகலின், அக்காலத்து இத்தடத்த சிவக்கோலமில்லாது போவதால் வருந்திங்கு எட்டுணையுமின்றாமெனத் துணிந்திடுக. ஆயின் அக்காலத்து வேண்டப்படுவதுதான் மற்றியாதெனின் அம்முத்தான்மாக்களனைத்தும் அத்துவிதமாய்க் கலந்து பேரின்பந்துய்த்தற்குத் தாரகமாயுள்ள சொரூபசிவம் ஒன்றேயாமென்க. ஆகவே அச்சொரூபசிவத்தை நித்தியப்பொருளாய்க்கொள்ளும் எமதுவாதம் ஆஸ்திகவாதமாய் முடிவதன்றி நாஸ்திக வாதமாய் முடியாதெனக்கொள்க.

இனி ஈண்டெடுத்துக்காட்டாக விளக்கிய "உருவருள்" என்றற்றொடக்கத்து வாக்கியங்கள் தடத்தசிவம் அல்லது பதிப்பொருள் கொண்ட அங்கப்பிரத்தியாங்க சாங்கோபாங்கங்களெல்லாம் அருள்வடிவேயென நாட்டுவதாகவும் அருள், கருணை, ஞானம், சத்தியென்பன சிவசத்திக்கு பரியாயப்பெயராக வழங்குவனவாகவும், இவ்வாறே பிறுண்டும் "மாயைதான் மலத்தைப்பற்றி வருவதோர் வடிவமாகும்" எனவும் "காயமோ மாயையன்றுகாண்பது சத்திதன்னால்' எனவும் "தேசருவம் அருவுருவம் உருவமாகித்தேவியுமாய்" எனவும் "மாயாவொருவன்மாயாவுருவினை யயான்எய்ந்தவரெம்மனோரே" எனவும் "விரவிய மாயாவுருவினைக்கடந்து விளங்கு மாயாவுருவுடையோன் பரசிவன் மாயாவுருவினையுடையோர் பரமலருயிரெனப்படுவோர்" எனவும் வருஞ்

சித்தாந்தவாக்கியங்கள்யாவும் ஒருபடியவாகப் பதி மாயாவடிவினனல்லனெனவும், ஞானமே (சத்தியே) திருவுருவாகவுடையனெனவும், மாயையை வடிவாகவுடையாரெல்லாம் உயிர்வர்க்கத்தைச் சேர்ந்தவரேயாவரெனவும் வச்சிரத்தம்பம்போல் நாட்டாநிற்பவும் நண்பர் தமது தசகாரியவிளக்கம் 9, 10-ம் பக்கங்களில் முதல்வன் சுத்தமாயையிற்றன் றிருமேனிகொள்வன் எனக்கூறியது எந்நூற் பிரமாணங்கொண்டோ அறிகிலம். சைவசித்தாந்தக் கொள்கைக்கு முற்றும் முரணான இம் மாயாவாதக்கொள்கையை நாட்டுவதற்கு அச் சைவசித்தாந்த நூற்பிரமாண வாக்கியம் ஒன்றுகூடக் கிட்டாமையாற்போலும் "வடிவங்கட்கெல்லாம் முதற்காரணம் மாயையேயன்றிச் சித்தல்ல" எனக் காரணகாரியப்பொருள் இலக்கணம் ஒன்றைக் கண்டெடுத்து அதுகொண்டு நாட்டுவாராயினர். இக் காரணகாரியப் பொருளிலக்கணத்தை மேலெடுத்துக்காட்டாக விளக்கிய "உருவருள்' என்பதாதியான பற்பலஉடன்பாட்டு வாக்கியங்கொண்டும், எதிர்மறை வாக்கியங்கொண்டும் முதல்வன்கொண்டது ஞானவடிவமேயன்றி மாயாவடிவமன்றென நாட்டிய சகலாகம பண்டிதரென்னுங் காரணப்பெயர் பெற்று சந்தாநசாரியருள் ஒருவராய் விளங்கிய அருணந்திசிவாசாரிய சுவாமிகள் ஆதியாய நூலாசிரியர் அறியாததும் அவ்வாக்கியங்கட்கு உரைகண்ட அதாவது "மாயைதான்மலத்தைப்பற்றி(க்கு) வருவதோர் வடிவமாகும்"என்ற வாக்கியத்துக்கு கூறியவுரை முடிவில் "ஏகதேச அறிவைச்செய்தல் ஏகதேசப்படும் தகுதியுடைய பொருட்கேயன்றி ஏனையதற்குரித்தன்று. வியாபகஅறிவைச்செய்தல் வியாபகப்பொருட்கேயன்றி ஏகதேசப்படுந் தகுதியுடையதற்கு உரித்தன்றாகலான். ஏகதேசமாயறியும் பசுக்களுக்கு ஏகதேசப்படும் தகுதியுடைய மாயையே உருவமாயிற்று, வியாபகமாயறியும் பசுபதிக்கு அதுபோல் ஏகதேசப்படும் தகுதியில்லாத சத்தியே உருவமாயிற்றெனக் கொள்க" என முதல்வன் சிற்சத்திவடிவினன் என்பதை எவ்வாற்றானும் மறுக்கமுடி

வாத எதுக்காட்டிநாட்டி இதுபோலவே மற்றும் வாக்கியங்களுக்கும் உரைகூறி நிறுத்திய மாதவச் சிவஞானயோகிகள் ஆதியாய உரையாசிரியர் அறியாததும் என்னையோ? இவரெல்லாம் இவ்விஷயத்தில் நண்பரைப்போல் நுட்ப ஆராய்ச்சி செய்திலரென்று கொள்ளல்வேண்டும் போலும் இனியேனும் இத்தகைய அபவாதத்தைக் கைவிட்டு சடவடிவிற்கு சடப்பொருளாகியமாயை முதற்காரணமாவதுபோல் ஞானவடிவிற்கு ஞானமயமாகிய சிவசத்திமுதற்காரணமாமெனவும் அவ்வடிவம் நீராலங்கட்டியாவதுபோல்வதோர் வடிவமாகலின் அவ்வடிவிற்கு சித்து முதற்காரணம் ஆகாதெனக்கூறும் வாதம் அடாதெனவுங்கண்டு சித்தாந்தநூல் நெறியையே பின்பற்றிச்சென்றிடுக.

இனி, பாசமென்பதும் ஆன்மாவைப் பந்தித்துநிற்றல் காரணமாக மலத்துக்குவந்த தடத்த நாமமேயாகலின் சர்வான்மாக்களும் முத்தியடைந்தவழி பந்தித்துநிற்றற்குத் தகுதியுடையபொருள் யாதொன்றுமின்மையின் அக்காலத்து அம்மலத்திற்குப் பந்திப்பதாகியகுணங் கெடாதிருப்பினும் பந்தித்தலாகிய தொழில் கெட்டுச் சிறிதுமில்லாது போய்விடுமாதலின் அக் காரணம்பற்றி வந்த பாசநாமமும் இல்லாது போதல் இயல்பேயாம். அங்ஙனம் போயினும் மலம் என்னும் சொரூப நாமமும் அக்குணமுடைப் பொருளும் நித்தியமேயாய் மேல்விளக்கிய வாறு விமலனிடத்து ஒடுங்கியடங்கியிருத்தலொருதலையாம் அற்றாக இங்ஙனம் கொள்ளும் எமது வாதம் ஆஸ்திக வாதமாய் முடிவதன்றி நாஸ்திகவாதமாய் முடியாதெனக்கொள்க.

இனி பசுவென்பதும் "பாசத்தாற் பாசியாகிப் பசுவெனநிற்குமான்மா" என்றபடி பாசபந்தத்துள் மூழ்கியிருத்தல் காரணமாக ஆன்மாவுக்கு வந்த தடஸ்தநாமமே யாகலின் அங்ஙனம் பந்திக்கப்படுதலால் வந்த பசுத்துவமும் அந்தக்காரணம்பற்றி வந்த பசுநாமமும் சர்வான்மாக்களும் முத்தியடைந்தவழி இல்லையாய் ஒழிந்துபோதலுண்மையே.

அங்ஙனம் ஒழியினும் ஆன்மா என்னும் சொருபநாமமும் அப்பொரு ளும் (முத்தான்மாக்களும்) நித்தியமாய் அறிந்தாங்கறியும் சிவத்தோடு இரண்டறக்கலந்து சிற்குணங்களாகிய எண்குணம் பதியப்பெற்று சிவானந்தத்தின் மூழ்கி தற்போதமிழந்திருக்கும் அந்நிலையில் இரண் டினையும் (பதிபாசங்களை) அறியும் ஏகதேச அறிவைப்பெற்றிருத்தல் கூடாவாம். அற்றாக ஏகதேசப்படும் பசு (பெத்தான்மா) காலாந்தரத் தில் இல்லாது போமெனவும் அவ்வாறில்லாதுபோயினும் முத்தான்மா நித்தப்பொருளேயாமெனவும் கூறும் எமதுவாதம் ஆஸ்திகவாதமாய் முடிவதன்றி நாஸ்திகவாதமாய் முடியாவாம். ஆகவே இங்ஙனங்கொள் ளும் வாதத்தை "நாஸ்திகவாதம் அல்லது சூனியவாதமாய்" முடியுமெ ன்று முடிவுசெய்தது, அவசித்தாந்த முடிவேயாமெனத் துணிந்திடுக.

இனி இவ்வாறு பலவாற்றானும் பூர்வபக்ஷஞ்செய்யப்படும் இவ் வவசித்தாந்தக்கொள்கையை சிவசித்தாந்தக்கொள்கையாக, ஆக்க விரு ம்பி பல, சில, பசுக்கள் ஒருங்குசேர்ந்து எம்மை நித்தமும் பெத்தான் மாவாகவே வைத்திருக்கவேண்டுமென வரம்பெறவேண்டி அருந்தவம் புரியினும் வேண்டுவார் வேண்டுவதை வரையாதுகொடுக்கும் வள்ளற் பரமன் பெருங்கருணையானது இத்தீய வரத்தைக் கொடுத்து அப் பசுக்களை நித்தியதுன்பத்தமிழ்த்த இசையாதாகலின் எக்காலத்தாயி னும் எல்லா ஆன்மாக்களையு முத்தியிற்சேர்த்தே அதன்பொருட்டுத் தொடங்கிய பஞ்சகிர்த்தியத்தை முடித்திடுமெனத்துணிந்திடுக.

அற்றாயின், "ஆதியலச் செம்பினுக்குக்களிம்பு தானும் ஆரா மிலதற்கதுவும் அனாதியாகும், ஆதியல உலகத்தை அடக்கித் தன்பால் ஆக்குவதும் வினையுமுயிர்க்கனாதியாமே" என்றபடி அநாதிதொட்டு இதுகாறும் நிகழ்ந்த பஞ்சகிருத்திய வழித்தாய் என் எல்லா ஆன்மாக் களும் இதன்முன்னரே முத்தியடைந்துமுடியவில்லை? இனிஎக்காலந் தான் முத்திஅடைந்து முடியுமெனின் அங்ஙனம் அடைதற்குரிய பக்

குவகாலகருமங்கள் ஒத்துவாராமையால் இதுகாறும் அடையவில்லையெனவும், அவை ஒத்துவருங்காலத்து அடைந்தே விடுமெனவும் விடுக்க.

அதனை *"புல்லாயநேக வுருப்போனபினர் நல்லறுகம்
புல்லாய்ப் பிறக்க வதுபோம்

பூமரங்களாய்ப்பிறந்து புண்ணியனுக் கானமையாற்
பூமரத்தி ஞர்பிறவி போம்.

புண்ணியதீர்த்தத்துட் புழுவாய்ப் பிறந்தமையாற்
கண்ணும் புழுப்பிறப்புக் காண்.

புள்ளா யனேகவுருப்போயபின்ர்ப் புட்பிறவி
விள்ளுநதி தோய விரைந்து.

துட்டமிரு கப்பிறப்பிற் றுன்னி நெடுங்காலங்
கட்டப்படுமுயிரார் காண்.

எல்லாவுருவு மெடுத்தெடுத்து நல்வினையா
னல்லாவுருவாகு நாடு.

ஆனைந்து மைம்முகனுக் கபிடேக புண்ணியத்தா
லானுருவை நீங்குமற.

ஆனுருவ நீங்குதலு மளவில்சிவ புண்ணியத்தான்
மானுடரா யிங்ஙன் வரும்.

எனவும் †"பருவமிக்குடையோரெல்லாம்பண்டைவல்வினையினேடு
மிருண்மலமாதிமூன் றுமிரிதாவீண்டேமுத்தி
மருவுவர்பருவத்தாழ்வான்மலரடிகலக்கமாட்டா
தொருவிலன்புஞற்றினோர்களூர்த்துவபுவனம்நண்ணி"

---

* வள்ளலார் சாத்திரம், பசுவியல், செய்யுள் கரு, உஉ.

† தணிகை அகத்தியருபதேசப்படம். ருஎக. ருஎஉ.

"அளப்பரும்போகந்துய்த்திட்டகிலமும்ஒடுங்கும்போது
வளப்படுமிறைவன்பாதம்மருவுவர்சில்லோர் —சில்லோர்
திளைப்புறகிரியாசாரஞ்சேர்ந்துவீடுறுவார்—சேர்ந்த
தளைப்புறுதிதிவீழ்காலைச்சிவத்தினைச்சார்வர்சில்லோர்"

எனவும்வரும் வாக்கியங்கள் புல்முதல் மனிதரீறாக எல்லாப் பிறப்புகளும் முத்தியடைதற்கு எய்துமாறு விளக்குவது கொண்டு தெளிந்திடுக.

இனி பஞ்சகிருத்தியத்தை அநாதி என்றதும் முப்பொருள் போன்ற அநாதி யன்றெனவும், அது அப்பஞ்சகிர்த்தியத்தைஇன்ன காலத்திற் தொடங்கியதென் வரையறுத்துக்கூற முடியாத காலநீட்சியுடையதென குறிப்பிடுவதான் பிரவாக அநாதியென்பதை யுணர்த்தற் பொருட்டாய் வந்ததெனவும் அது காலநீட்சியின் மரிக்கும் தேவர்களை "கேடிலர்" என்னும் பொருள்தரும் அமரசத்தத்தால் வழங்குவது போல்வ தொன்றுமெனவுங்கொள்க.

இனி, அத்தசகாரிய விளக்கத்தில் நம் சைவசித்தாந்துக்கு முரணான விஷயங்கள் மேலும் சிலவிருப்பினும் அஃதிவ்வளவு முக்கியமின்மைபற்றி இப்போததனைக்கவனித்திலம். இஃதன்றியும்அதன்கண் ஓர் வினவை எழுப்பி அதற்கு விடை கூறாது விடுத்ததும், வினு வேண்டாத விடை கூறியுள்ளதும், இவைபோன்றுள்ள பிறவுமான பல இலக்கண வழுக்களும் ஆங்காங்கு காணக்கிடப்பினும் இலக்கண இலக்கிய நூலாராய்ச்சியின்றி சித்தாந்த நூலாராய்ச்சி சிறிது செய்துள்ள அளவில் நூல்எழுதப்புகும் நண்பர்போல்வாரிடத்தும், என்போல்வாரிடத்தும் இத்தகைய வழுக்கள் மிகக் காணப்படுதல் சகசமாதலின் அவற்றைக் கவனித்தல் தகுதியன்றென விடுத்தாம்

இனி ஈண்டிதுகாறும்கூறிய எமது சித்தாந்தத்தாற் போந்த தொகைப் பொருளாவன. முத்தான்மாவைவிட்டு நீங்கிய ஆணவமலம்

பெத்தான்மாவை நணுகிநிற்குமென்றதுபாடானவாதசைவரைமறுத்தற் பொருட்டு எடுத்துக்காட்டிய ஏதுவாக்கியமேயன்றி ஆணவமலம்நித்தியமும் தங்குமிடம் பெத்தான்மாவேஎன சித்தாந்தம் செய்தற்கெழுந்த வாக்கியமன்று சர்வான்மாக்களும் முத்தியடைந்தவழி, ஆணவமலம் தங்குதற்குரிய இடம் சிவபரம் பொருளேயாம் அற்றாக, அவ்வாணவ மலம் நித்தமும் தங்கிநிற்றற்பொருட்டுப் பெத்தான்மா நித்தமும் இருந்தே தீரவேண்டுமென்பதின்றாகலின் சர்வான்மாக்களுங் காலாந்தரத்தில்முத்தியைச்சார்ந்தேவிடும்என்பதூஉம். ஆன்மாக்கள் அளவிறந்தன என்பது கணித எண்பெயர்களால் இவ்வளவென வரையறுத்துக்கூற இயலாதபெருந் தொகையின என்பதேயன்றி பிறிதில்லையாகலின் அவையனைத்தையும் பந்தத்தினின்று விடுவித்து முத்தியிற்சேர்க்கும் காருண்யமே காரணமாகப் பஞ்சகிருத்தியந்தொடங்கிய பதி எக்காலத்திலாயினும் எல்லா ஆன்மாக்களையும் அதாவது அநாதியேயுள்ளதைத் தவிர மேல்வருமாறில்லாத சர்வான்மாக்களையும் முத்தியிற்சேர்த்தே அப்பஞ்சகிருத்தியத்தை முடித்திடுமென்பதூஉம், ஆன்மாக்கள் அளவிறந்தன என்பதற்கு மேற் கூறியவாறு பொருட்கொள்ளலாகாது எடுக்க எடுக்கக் குறையாதிருப்பதென்றே பொருட்கொள்ள வேண்டுமெனின் ஆன்மா உலவாக்கோட்டைபோல்வதொன்றாய் எத்துணைப் பல்லாயிரகோடி ஆன்மாக்களைப் பெத்தத்தினின்று முத்திக்கண் விடுத்தாலும் அத்துணைப்பல்லாயிரகோடி ஆன்மாக்களும் புதிதுபுதிதாகஅப்போதப்போதே உண்டாய்விடு மெனக்கொள்ளவேண்டிவரும். அவ்வாறு கொள்ளவே அது பெத்தான்மாக்களின் இருப்புத் திட்டத்தில் ஒன்றேனும் குறைவுபடாது பிரதமசிருட்டிக்கு முன்னிருந்தபடியே என்றும் இருக்குமாறு செய்து இறைவன் செய் பஞ்சகிருத்தியத்தைப் பயனில் கிருத்தியமாக்குவதாதியாய பல குற்றத்தைச் சைவசித்தாந்தத்துக்கு உரித்தாக்கி ஒப்புயர்வற்ற அதன் பெருமைக்குச் சிறுமை உண்டுபண்ணுவதாய்முடிவதால் அப்பொருள் சிறிதும்பொருந்தாதென்

பதூஉம், பதி (தடஸ்தசிவம்) பசு, பாசம் என்பனமுறையே சிவம், ஆன்மா, மலம் என்னும் முப்பொருட்கும் தடஸ்த இலக்கணம்பற்றி வந்த தடஸ்த நாமமே; சர்வான்மாக்களும் முத்தியடைந்த வழி அதன் முன் முத்தியடைவதற்கு இடையூறுய்செய்துவந்த ஆணவ பந்த நோய் முற்றுந் தொலைவுற்றிடுமாதலால் அக்காலத்து அந்நோய்த் தொலைக்கும் வைத்தியன் போன்று வந்த தடஸ்த சிவக்கோலமும், அத்தொழிலும், அந்நாமமும் சிவத்துக்கு இல்லாதுபோவதும், அங்ஙனமே பந்தத்துள் மூழ்கியிருத்தலாகிய பசுத்துவச்செயலும், பசுஎன்னும்நாமமும் ஆன்மாவுக்குஇல்லாதுபோவதும், அவ்வான்மாவைப்பந்தித்து நிற்றலாகியதொழிலும, பாசம் என்னும் நாமமும் மலத்துக்கு இல்லாதுபோவதும் இயல்பேயாகலின், இவ்வாறுன தடஸ்தச்செயலும் தடஸ்தநாமமும் இலலாதுபோவதால் வரும் தீங்கு எட்டுணையும் இன்றென்பதூஉம், இங்ஙனம் தடஸ்தச்செயலுக்கும், அந்நாமத்துக்கும் அநித்தியத்துவங்கூறி சொரூப நாமத்துக்கும்அப்பொருளுக்கும், அவற்றின் செயலுக்கும் நித்தியத்வங்கூறும் எமதுமதம் ஆஸ்திகமதமாய் நிலைபெறுவதன்றி நாஸ்திகமதமாய் அழிவுறுவதன்றென்பதூஉம், அங்ஙனம்கொள்ளும் எமது மதத்தை நாஸ்திகமதம் அல்லது சூனிய மதமாமெனக் கூறிய முடிவு அவசித்தாந்த முடிவேயாமென்பதூஉம், ஆகவே சர்வான்மாக்களும் காலாந்தரத்தில் முத்தியைச் சார்ந்தேவிடுமென்பதூஉம், பிறவுமாம்.

முற்றும்.

## ஓர் வேண்டுகோள்.

இதனைப்பார்வையிடும் சைவசித்தாந்தப் பெரியோர்களே இதில் தங்களுக்குத் தோன்றுவதான அபிப்பிராயங்களை எனக்குத் தெரிவிக்கவேண்டுமெனப் பிரார்த்திக்கின்றேன்.

தெ. ச. சு.



உ

தூத்துக்குடிச்

சைவசித்தாந்த சபையாரால் வெளியிடப்பட்டுள்ள

# புத்தக விளம்பரம்.

| | | | ரூ. அ. ப. |
|---|---|---|---|
| 1. | சைவாநுட்டானக் கிரியாவிதி | ... | 0—3—0 |
| 2. | பண்விளக்கத் தேவாரப்பதிகம் | ... | 0—2—0 |
| 3. | திரிபதார்த்த சிந்தனைப்படலம் | ... | 0—1—0 |
| 4. | கந்தர் கலிவெண்பா | ... ... | 0—0—6 |
| 5. | சிவஞான மாபாடியம் | ... ... | 2—0—0 |
| 6. | வேளாண்மரபுண்மை விளக்கம் | ... | 0—8—0 |

(தபாற்கூலி பிரத்தியேகம்.)

5-பிரதி வாங்குவோருக்கு 1-பிரதி இனாமளிக்கப்படும்.

☞ "சர்வான்மாக்களும் முத்தியைச் சார்ந்தேவிடும்" என்னும் இப்புத்தகம் தபாற்கூலிக்காக அரையணாத் தபால்முத்திரை யனுப்புவோருக்கு இனாமாக அனுப்பப்படும்.

தெ. ச. சு. சுப்பிரமணியபிள்ளை,

காரியதரிசி,

சைவசித்தாந்த சபை,

தூத்துக்குடி.